# *குரான் மற்றும் இஸ்லாமிய கிரந்தங்களின் அடிப்படையில் உலகம் உருவாக்கப்பட்ட வரலாறு*

குரானில் எந்த ஒரு தவறும் இல்லை என்றும் குரானில் உள்ள  படைப்பு பற்றிய வசனங்கள் அதாவது அல்லாஹ்வின் வார்த்தைகள் இன்றைய அறிவியலுக்கு அப்படியே ஒத்துபோகிறது என்றும்  இதனால் குரான் இறைவேதம் என்றும் இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள்.  இவர்கள் அறிவியல் என்று சொல்லும் விஷயம் என்னவெனில் பெருவெடிப்பு கோட்பாடு ஆகும். ஆனால் இது வெறும் ஒரு யூகத்தின் அடிப்படையிலான விஷயமாகும். இது ஒரு நிரூபிக்க படாத கோட்பாடு ஆகும். இதை  அப்படி நிரூபிக்கவும் முடியாது.  ஆனால் இஸ்லாமியர்கள் இதை வைத்து கொண்டு பைபிளில் தவறு உள்ளது என்று சாகிர் நாயக் போன்ற இஸ்லாமிய அறிஞர்கள் பேசுகிறார்கள்.

இதனால் குரானில் உள்ள படைப்பு பற்றிய வசனங்களை இஸ்லாமிய கிரந்தகளை அடிப்படையாக வைத்து ஆராய்வோம். நாம்  விஷயத்திற்கு போகும் முன்பு ஒன்றை சொல்லி கொள்ள விரும்புகிறேன். என்னவென்றால் இதில் உள்ளவற்றை மட்டும் அப்படியே படிக்காமல் நாம் சொல்வது குரானில் உள்ளதா என்றும் குரான் ஹதீஸ் மற்றும் தப்ஸீர் களையும் படிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

*முதலாவது படைக்கப்பட்டது வானமா அல்லது பூமியா*

முதலாவது குரானில் இருந்து ஒரு வசனத்தை பார்போம் ~

அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் : 2:29)

இங்கிருந்து தான் நமது ஆய்வை ஆரம்பிக்க வேண்டும். நாம் தொடர்ந்து ஆராய போகும் எல்லா விஷயத்திற்கும் அடிப்படை என்பது இந்த விஷயமே ஆகும்.சாகிர் நாயக் போன்றவர்கள் குரானில் உள்ள படைத்தல் விஷயத்தை குறித்து சொல்லும் போது வானங்களும் பூமியும் ஒரே நேரத்தில் படைக்கப்பட்டது என்று சொல்கிறார்கள். ஆனால் குரானில் நாம் மேலே போட்ட 2;29 ஆம் வசனத்தில் பூமியில் உள்ள அனைத்தும் படைத்து விட்டு பின்னர் தான் வானத்தின் பக்கம் முற்பட்டதாக பார்க்கிறோம். இந்த வசனத்தில் "பின்னர்" என்ற வார்த்தையின் அரபு மூல மொழியில் தும்மா என்கிற வார்த்தை தான் கொடுக்கப்பட்டு உள்ளது. இதற்க்கு குரானில் ஏறக்குறைய எல்லா இடங்களிலும் "பின்னர்" என்று தான் மொழிபெயர்க்கப்பட்டு உள்ளது.  ஆனால் இதன் அரபு வார்த்தையாகிய தும்மா என்னும் வார்த்தைக்கு "அதேநேரத்தில்" என்ற அர்த்தமும் உண்டு என்று சொல்லி இதனால் அதேநேரத்தில் என்று தான் இங்கே அர்த்தம் என்று வாதாடுகிறார்கள். இவர்களது இந்த வாதம் உண்மையில் குரானுக்கு முரணான வாதம் ஆகும். எப்படி என்பதை நாம் கீழே பார்போம்.

நான் இங்கே 41;11,12 ஆகிய வசனங்களை கீழே போடுகிறேன். ஆனால் 9 முதல் உள்ள வசனங்களை குரானில் இருந்து நீங்கள் படிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.

(அல்குர்ஆன் : 41:11)

ஆகவே, இரண்டு நாட்களில் அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென அறிவித்தான்; இன்னும், உலகத்திற்கு சமீபமான வானத்தை நாம் விளக்குகளைக் கொண்டு அலங்கரித்தோம்; இன்னும் அதனைப் பாதுகாப்பாகவும் ஆக்கினோம்; இது யாவரையும் மிகைத்தவனும், ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனுடைய ஏற்பாடேயாகும்.

(அல்குர்ஆன் : 41:12)

இந்த வானங்களின் 9 முதல் உள்ள வசனங்களை நீங்கள் வாசித்தால் முதலாவது பூமியையும் அதில் உள்ளவைகளையும் படைக்கும் விஷயத்தை பார்க்கலாம். அடுத்து நீங்கள் "பின்னர்" வானத்தை படைக்க நாடினான் என்று பார்க்கலாம். அவ்வாறு படைக்க நாடும் போது அது ஒரு புகையாகவே இருந்தது என்பதை கவனிக்க வேண்டும். அப்படி இருக்கும் போது ஏழு வானத்தையும் படைக்கும் முன்பு அந்த அல்லாஹ் அந்த புகையையும் பூமியையும் பார்த்து நீங்கள் வாருங்கள் என்று கூப்பிடுகிறான். இங்கே நீங்கள் உன்னிப்பாக கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் வானத்தை படைக்கும் முன்பு பூமியை பார்த்து வரும் படி அல்லாஹ் சொல்கிறான் என்றால் பூமியை படைக்கும் போது வானம் படைக்கபடவில்லை என்பது தெளிவாகிறது. அவ்வாறு பூமியும் புகையும் அல்லாஹ்விடம் சென்ற பிறகு தான் 7 வானங்களை அல்லாஹ் படைக்கிறான் என்று பார்க்கலாம். இதன் மூலம் பூமி படைக்கப்பட்ட பிறகு தான் வானம் படைக்கப்பட்டது என்பதை குரான் மூலமே மிக தெளிவாக நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

இது மட்டுமல்ல இஸ்லாமிய கிரந்தங்களும் இதை தான் சொல்கிறது.

ஆதாரமாக ibn kathir 2;29 தப்சீரில் (அதை சுருக்கமாக கீழே போடுகிறேன். )

வானம் மற்றும் பூமி ஆகியவற்றில் முதலில் பூமியையும் அடுத்து எழு வானங்களையும் அல்லாஹ் படைத்தான் என்பதற்கு இந்த ( 2;29) வசனம் ஒரு சான்று ஆகும். இதுவே கட்டிட அமைப்பின் நியதியும் கூட. முதலில் கீழ்தளத்தை கட்டி முடித்து விட்டு, அதன் பின்னரே மேல்தளம் எழுப்பப்படும். குரான் விரிவுரையாளர்கள் பலரும் இக்கருத்தையே வெளியிட்டுள்ளனர்.

இந்த கேள்வி இப்னு அப்பாஸிடமும் எழுப்பப்பட்டது. அதற்க்கு அவர்கள் ; பூமியே வானத்திற்கு முன்பு படைக்கப்பட்டது என்று பதிலளித்தார்கள் எனும் செய்தி சஹீஹ் புகாரியில் இடம்பெற்று உள்ளது.""

ஆக மிக தெளிவாக முதலில் பூமி தான் படைக்கப்பட்டது என்றும் அதன் பிறகு தான் வானம் படைக்கப்பட்டது என்றும் குரான் மற்றும் இஸ்லாமிய கிரந்தத்தின்

அடிப்படையில் நிரூபிக்கப்பட்டது.

இதை அடிப்படையாக வைத்தே இனி நாம் படைப்பு விஷயத்தை ஆராய வேண்டும்.

*இனி குரானில் வானங்களும் பூமியும் மொத்தம் படைக்க  ஆறு நாட்கள் ஆனது என்று சொல்லும் வசனங்களை பார்போம். ;~*

Version ;~1

நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ் தான் ஆறு நாட்களில் வானங்களையும், பூமியையும் படைத்துப் பின் அர்ஷின் மீது தன் ஆட்சியை அமைத்தான் - ........

(அல்குர்ஆன் : 7:54)

நிச்சயமாக உங்கள் இறைவன் அல்லாஹ்வே; அவன் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான் - பின்னர் தன் ஆட்சியை அர்ஷின் மீது அமைத்தான்; ...........

(அல்குர்ஆன் : 10:3)

மேலும், அவன்தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான் அவனுடைய அர்ஷு நீரின் மேல் இருந்தது. ...........

(அல்குர்ஆன் : 11:7)



அவனே வானங்களையும், பூமியையும், அவற்றிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்; .........

(அல்குர்ஆன் : 25:59)

அல்லாஹ் தான் வானங்களையும், பூமியையும், இவ்விரண்டிற்கும் இடையிலிருப்பவற்றையும் ஆறு நாட்களில் படைத்துப்பின் அர்ஷின் மீது அமைந்தான்; அவனையன்றி உங்களுக்கு உதவியாளரோ, பரிந்து பேசுபவரோ இல்லை. எனவே (இவற்றையெல்லாம்) நீங்கள் (நினைத்து) சிந்திக்க வேண்டாமா?

(அல்குர்ஆன் : 32:4)

இங்கே வானங்களும் பூமியும் அவற்றுக்கு இடையேஉள்ளவற்றையும் படைக்க மொத்தம் ஆறு ஆட்கள் ஆனது என்று நாம் மிக தெளிவாக பார்க்கலாம்.

*வானங்களையும் பூமியையும் படைக்க மொத்தம் 11 நாட்கள் ;~*

Version no 2 ;~

இதற்க்கு ஆதாரமாக முதலாவது ஒரு வசனத்தை பார்போம்

அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாக இருக்கிறான்.



(அல்குர்ஆன் : 2:29)

இந்த வசனத்தை கவனமாக பாருங்கள்.,,, பூமியையும் அதில் உள்ளவற்றையும் படைத்த பின்னர் தான் வானத்தின் பக்கம் முற்பட்டான் என்று பார்க்கிறோம். அப்படியானால் முதலாவது பூமியை படைக்க எத்தனை நாட்கள் ஆனது என்பதை நாம் அறிய வேண்டும். அதற்க்கு ஆதாரமாக கீழே வசனத்தை போடுகிறேன்.

“பூமியை இரண்டே நாட்களில் படைத்தவனை நிராகரித்து ............

(அல்குர்ஆன் : 41:9)

இந்த வசனத்தின் மூலம் பூமியை அதாவது பூமி என்ற கோளத்தை மட்டும் படைக்க அல்லாஹ்வுக்கு இரண்டு நாட்கள் தேவை பட்டது. இனி பூமியில் உள்ளவற்றை படைக்க எத்தனை நாட்கள் ஆனது என்று அறிய முஹம்மது நபி சொன்ன முஸ்லீம் 5397 ஆவது ஹதீஸை பார்க்க வேண்டும்.

. ஹதீஸ் பெரியது ஆனபடியால் நம்பர் மட்டும் கொடுக்கிறேன். முஸ்லீம் ஹதீஸ் 5379

அதில் உள்ள படைப்புகள் வரிசையாக கீழே 👇

1 ;~ சனிக்கிழமை மண்ணை படைக்கிறான்

2 ;~ மலைகள் ஞாயிற்று கிழமை படைக்கிறான்

3 ;~ திங்கள் கிழமை மரங்களை படைக்கிறான்.



4 ;~ செவ்வாய் கிழமை துன்பத்தை படைக்கிறான்

5 ;~ புதன் கிழமை ஒளியை படைக்கிறான்.

( இந்த ஒளியை நுஸ்கி நன்மை என்று சொல்கிறார்.அதை ஒரு வாதத்துக்காக அப்படியே எடுப்போம்.)

6 ; ~ வியாழன் கிழமை உயிரினங்களை படைக்கிறான் .

7 ;~ வெள்ளிக்கிழமை ஆதமை படைக்கிறான்.

இங்கே கவனமாக பாருங்கள்,,,,,, இவை அனைத்துமே பூமியில் உள்ள படைப்புகள் ஆகும்...

அப்போ பூமியை படைக்க 2 நாட்கள் அதில் உள்ளவற்றை படைக்க 7 நாட்கள். இதன் பின்னர் வானத்தை படைக்க எத்தனை நாட்கள் ஆனது என்று பார்க்க வேண்டும் என்றால் அதற்கான ஆதார வசனத்தை கீழே போடுகிறேன்

ஆகவே, இரண்டு நாட்களில் அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ............

(அல்குர்ஆன் : 41:12)

இனி மொத்தம் எத்தனை நாட்கள் ஆனது என்று கூட்டி பாருங்கள்

பூமியை படைக்க 2 நாட்கள்

அதில் உள்ளவற்றை படைக்க 7 நாட்கள்

வானத்தை படைக்க 2 நாட்கள்

மொத்தம் 2+7+2= 11 நாட்கள்

(இங்கே நாம் கவனிக்க வேண்டிய சில விஷயங்கள் காணப்படுகிறது.முதலாவது பூமியையும் அதில் உள்ள எல்லாவற்றையும் படைத்த பிறகு தான் வானத்தை படைத்ததாக குரான் சொல்கிறது என்பதை இப்போது கவனித்தோம்.

இன்னும் அத்துடன் ஒரு வசனத்தையும் பாருங்கள்

(நபியே! இன்னும் வரவில்லையே என்று) வேதனையை அவர்கள் அவசரமாக தேடுகிறார்கள்; அல்லாஹ் தன் வாக்குறுதிக்கு மாறு செய்வதேயில்லை; மேலும் உம்முடைய இறைவனிடம் ஒரு நாள் என்பது, நீங்கள் கணக்கிடுகிற ஆயிரம் ஆண்டுகளைப் போலாகும்.

(அல்குர்ஆன் : 22:47)

அல்லாஹ்வுக்கு ஒரு நாள் என்பது 1000 ஆண்டுகள் ஆகும் என்று இந்த வசனத்தின் மூலம் தெளிவாகிறது.

அப்படியானால் பூமியில் உள்ள மரங்களை திங்கள் கிழமை தான் படைக்கிறான். பின்பு பூமியில் உள்ள படைப்புகள் முடிந்த பிறகு வானத்தின் பக்கம் திரும்பி வானத்தை படைக்கிறான். அப்படியானால் அதுவரை சூரியன் இல்லாமல் தாவரங்கள் எப்படி பட்டு போகாமல் இருந்தது. ? .இது அறிவியல் பிழை.

இப்போது இஸ்லாமியர்கள் வழக்கமாக பைபிளில் அறிவியல் பிழைகள் உள்ளது சொல்லும் போது இதே நிலை அவர்களுக்கு தான் உள்ளது. பைபிளில் பிழை என்பது இல்லவே இல்லை என்பதை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். காரணம் முதலாவது தேவன் வெளிச்சத்தை உண்டாக்கிய பிறகு தான் மற்ற உயிரின  படைப்புகளை தேவன் படைக்கிறார்.)

*வானங்களையும் பூமியையும் படைக்க மொத்தம் 9 நாட்கள் ;~*

Version no ;~ 3

கீழே உள்ள வசனங்களை பாருங்கள்

“பூமியை இரண்டே(2) நாட்களில் படைத்தவனை நிராகரித்து அவனுக்கு இணைகளையும் நிச்சயமாக நீங்கள் தான் ஏற்படுத்துகிறீர்கள்? அவன் அகிலத்தாருக்கெல்லாம் இறைவன்” என்று (நபியே!) கூறுவீராக.

(அல்குர்ஆன் : 41:9)

அவனே, அதன் மேலிருந்து உயரமான மலைகளை அமைத்தான்;(1) அதன் மீது (சகல விதமான) பாக்கியங்களையும் பொழிந்தான்; இன்னும், அதில் அவற்றின் உணவுகளை நான்கு(4) நாட்களில் சீராக நிர்ணயித்தான்; (இதைப் பற்றி) கேட்கக் கூடியவர்களுக்கு (இதுவே விளக்கமாகும்).

(அல்குர்ஆன் : 41:10)

பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.

(அல்குர்ஆன் : 41:11)

ஆகவே, இரண்டு நாட்களில்(2) அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென

அறிவித்தான்; இன்னும், உலகத்திற்கு சமீபமான வானத்தை நாம் விளக்குகளைக் கொண்டு அலங்கரித்தோம்; இன்னும் அதனைப் பாதுகாப்பாகவும் ஆக்கினோம்; இது யாவரையும் மிகைத்தவனும், ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனுடைய ஏற்பாடேயாகும்.

(அல்குர்ஆன் : 41:12)

இந்த வசனங்களை நாம் கூர்ந்து கவனித்தால் பூமியை படைக்க இரண்டு நாட்கள் ஆனது என்று பார்க்கலாம். அடுத்ததாக மலைகளை  அமைத்ததாக பார்க்கலாம். ஆனால் அதற்க்கு நாள் கணக்கு குரானில் சொல்லவில்லை என்றாலும் முஹம்மது நபி முஸ்லீம் 5379 ஆம் ஹதீஸில் இதற்க்கு ஒரு நாள் ஆனது என்று சொல்லி இருக்கிறார். இதன் அடிப்படையில் மலைகளை படைக்க ஒரு நாள். அடுத்ததாக உணவுகளை சீரமைக்க 4 நாட்கள் ஆனது என்று பார்க்கலாம். அதன் பின்பு ஏழு வானங்களை  படைக்க 2 நாட்கள் ஆனது என்று பார்க்கலாம்...

இப்போது இதன் அடிப்படையில் நாம் கூட்டினால் மொத்தம்

2+1+4+2= 9 நாட்கள்

அப்போ வானங்களையும் பூமியையும் படைக்க எத்தனை  நாட்கள் ஆனது என்று கேட்டால் குரான் மற்றும் நபியின் வார்த்தைகளின் மூலம் நாம் ஆராய்ந்து பார்த்தால் முழுக்க முழுக்க முரண்பாடாகவே உள்ளது

*பூமியில் உள்ளவற்றை படைத்தது வானத்தை படைக்கும் முன்பா அல்லது பின்பா ?*

முன்பு ;~



அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் : 2:29)

“பூமியை இரண்டே நாட்களில் படைத்தவனை நிராகரித்து அவனுக்கு இணைகளையும் நிச்சயமாக நீங்கள் தான் ஏற்படுத்துகிறீர்கள்? அவன் அகிலத்தாருக்கெல்லாம் இறைவன்” என்று (நபியே!) கூறுவீராக.

(அல்குர்ஆன் : 41:9)

அவனே, அதன் மேலிருந்து உயரமான மலைகளை அமைத்தான்; அதன் மீது (சகல விதமான) பாக்கியங்களையும் பொழிந்தான்; இன்னும், அதில் அவற்றின் உணவுகளை நான்கு நாட்களில் சீராக நிர்ணயித்தான்; (இதைப் பற்றி) கேட்கக் கூடியவர்களுக்கு (இதுவே விளக்கமாகும்).

(அல்குர்ஆன் : 41:10)

பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.

(அல்குர்ஆன் : 41:11)

ஆகவே, இரண்டு நாட்களில் அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென அறிவித்தான்; இன்னும், உலகத்திற்கு சமீபமான வானத்தை நாம் விளக்குகளைக் கொண்டு அலங்கரித்தோம்; இன்னும் அதனைப் பாதுகாப்பாகவும் ஆக்கினோம்; இது

யாவரையும் மிகைத்தவனும், ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனுடைய ஏற்பாடேயாகும்.

(அல்குர்ஆன் : 41:12)

இந்த வசனங்களின் மூலம் பூமியையும் அதில் உள்ளவற்றையும் படைத்த பிறகு தான் வானத்தை அல்லாஹ் படைத்தார் என்று நம்மால் பார்க்க முடியும். அதாவது மரங்கள், மலைகள், உயிரினங்கள் எல்லாமே.

வானத்தை படைத்த பின்பு ;~

உங்களைப் படைத்தல் கடினமா? அல்லது வானத்தை (படைத்தல் கடினமா?) அதை அவனே படைத்தான்.

(அல்குர்ஆன் : 79:27)

அதன் முகட்டை அவன் உயர்த்தி அதை ஒழுங்கு படுத்தினான்.

(அல்குர்ஆன் : 79:28)

அவன்தான் இரவை இருளுடையதாக்கிப் பகலின் ஒளியை வெளியாக்கினான்.

(அல்குர்ஆன் : 79:29)

இதன் பின்னர், அவனே பூமியை பிரித்தான்.

(அல்குர்ஆன் : 79:30)

அதிலிருந்து அதன் தண்ணீரையும், அதன் மீதுள்ள (பிராணிகளுக்கான) மேய்ச்சல் பொருள்களையும் அவனே வெளியாக்கினான்.

(அல்குர்ஆன் : 79:31)

அதில், மலைகளையும் அவனே நிலை நாட்டினான்.

(அல்குர்ஆன் : 79:32)

இந்த வசனங்களில் வானத்தை படைத்து விட்டு பூமியை விரித்ததாக பார்க்கலாம்.அதாவது முதலாவது பூமியை படைத்து பின்னர் வானத்தை படைத்து அதன் பிறகு பூமியை விரித்ததாக அர்த்தம். ஆனால் நாம் இங்கே கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் வானைத்தை படைத்த பிறகு தான் பூமியில் மலைகளை நாட்டி, தண்ணீர் மற்றும் மேய்ச்சல் பொருட்களை வெளியாக்குகிறான் என்று பார்க்கலாம்.

இதுவும் படைத்தல் விஷயத்தில் உள்ள தெளிவான முரண்பாடு ஆகும்.

நாம் இதுவரை பூமி உண்டாக்கப்பட்ட பிறகு வானம் படைக்கப்பட்டதாகவும் அதில் உள்ள முரண்பாடுகளையும் பார்த்தோம். ஆனால் நாம் இதுவரை பார்த்த விஷயங்களுக்கு தொடர்பு இல்லாமல் அல்லாஹ் சொன்ன இன்னொரு version னையும் பார்ப்போம் ;~

நிச்சயமாக வானங்களும், பூமியும் (முதலில்) இணைந்திருந்தன என்பதையும்,



இவற்றை நாமே பிரித்(தமைத்)தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொன்றையும் நாம் தண்ணீரிலிருந்து படைத்தோம் என்பதையும் காஃபிர்கள் பார்க்கவில்லையா? (இவற்றைப் பார்த்தும்) அவர்கள் நம்பிக்கை கொள்ள வில்லையா?

(அல்குர்ஆன் : 21:30)

இதற்கான இப்னு kathir tafsir ல் இதை பற்றி சொல்லப்பட்ட விஷயம் சுருக்கமாக கீழே.

ஆரம்பத்தில் அவை அனைத்தும் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டிருந்தன. ஒன்றன் மேல் ஒன்றாக குவிக்கப்பட்டிருந்தது. பின்னர் அவர் அவர்களை(அவைகளை) ஒருவருக்கொருவரை பிரித்தார்,மேலும் வானத்தை ஏழாகவும் பூமியை ஏழாகவும் ஆக்கினார். பூமிக்கும் மிகக் குறைந்த வானத்திற்கும் இடையில் காற்றை வைத்தார். பின்னர் அவர் வானத்திலிருந்து மழை பெய்யவும், பூமியிலிருந்து தாவரங்கள் வளரவும் செய்தார்.

இப்னு அப்பாஸ் சொன்னார் ; சொர்க்கம் ஒன்றாக இணைக்கப்பட்டிருந்தது. மற்றும் பூமி ஒன்றாக இணைக்கப்பட்டது மற்றும் எதுவும் வளரவில்லை.பூமியை ஆக்கிரமிக்க உயிரினங்கள் உருவாக்கப்பட்ட போது,வானத்திலிருந்து மழை பெய்தது மற்றும் தாவரங்கள் பூமியிலிருந்து வெளிப்பட்டது.)

சாதாரணமாக இஸ்லாமியர்கள் எல்லோருமே இந்த வசனத்தை அடிப்படையாக வைத்து தான் big bang குரானில் சொல்லப்பட்டு இருக்கிறது என்று சொல்வார்கள். ஆனால் உண்மையில் bigbang கோட்பாடு சொல்கிறது என்னவென்றால் bigbang நடைபெற்று பல லட்சம் வருடங்களுக்கு பிறகு தான் சூரியன் தோன்றினதாகவும் பிறகு அதிலிருந்து பல லட்சம் வருடங்களுக்கு பிறகு தான் பூமி வந்ததாகவும் உள்ளது. ஆனால் குரானில் இதற்க்கு நேர் முரணாக முதலாவது பூமியும் அதில் உள்ளவற்றை படைக்கப்பட்ட பின்னர் தான் வானம் படைக்கப்பட்டதாக உள்ளது. சரி,, நாம் இந்த வசனங்களையும் ஆராய்வோம். .

நாம் கவனிக்க வேண்டிய முதலாவது விஷயம் என்னவென்றால் பூமி என்கிற ஒரு பொருளை அல்லாஹ் படைக்கும் முன்பு பூமி என்பது இல்லை. அப்போது

பூமியையும் வானத்தையும் படைத்த பிறகு தான் இரண்டும் ஒன்றாக இருந்ததாக ஆம் எடுக்க அர்த்தம் கொள்ள முடியும். நாம் கவனிக்க வேண்டிய இரண்டாவது விஷயம் என்னவென்றால்

நமுக்கு பொதுவாக தெரிந்த ஒரு விசயம் என்னவென்றால் வானம் என்பது ஒரு வெற்றிடம் ஆகும். வெற்றிடம் ஒரு போதும் இன்னொரு பொருளுடன் இணைந்து இருந்ததாக சொல்ல முடியாது. வானமும் பூமியும் எப்படி இணைந்து இருந்தது என்று இப்னு kathir tafsir ல் சொல்லப்பட்டு இருக்கிறது. எப்படி என்றால் ஒரே துண்டாக, ஒன்றின் மேல் ஒன்றாக இணைந்து இருந்ததாக சொல்லப்படுகிறது. இதை நாம் இன்னும் எளிதாக புரிய வேண்டும் என்றால் நமது இரண்டு கைகளையும் ஒன்றாக சேர்த்து வைத்தால் எப்படி ஒன்றாக இருக்குமோ அது போல ஆகும். அப்போ இங்கே நாம் கவனிக்க வேண்டிய இரண்டு விஷயங்கள் காணப்படுகிறது.

1 ;~ பூமி ஒரு தட்டை

2 ;~ வானம் என்பது ஒரு திட பொருள்.

பூமியை அல்லாஹ் விரித்து உள்ளதாக நிறைய இடங்களில் சொல்லி இருக்கிறான். ஆதாரமாக ;~ 13 ; 3, 15;19, 55;10, 71;19, 78;6 79;30 ஆகிய வசனங்களில் பூமியை விரித்து அமைத்ததாக மிக தெளிவாக சொல்லப்பட்டு உள்ளது. பூமி ஒரு தட்டை என்று குரான் சொல்கிறது என்பதற்கு 21;30 மிக பெரிய ஒரு ஆதாரம் ஆகும். இன்னும் இதர வசனங்கள் கூடுதல் ஆதாரங்கள் ஆகும்.

இன்னும் ஆதாரமாக 79;30 ஆம் வசனத்தின் jelaleyan தப்ஸீரை கீழே போடுகிறேன் ;~

அதன்பிறகு அவர் பூமியை விரித்தார்: அவர் அதை தட்டையாக ஆக்கினார்,ஏனென்றால் அது வானத்திற்கு முன்பே உருவாக்கப்பட்டது. )

இதில் இருந்து உலகத்தை படைத்தேன் என்று சொல்லும் அல்லாஹ்வின் அறிவு எப்படி பட்டது என்று நீங்களே அவதானித்து கொள்ளுங்கள்.

*பூமியை விரித்தல் என்றால் என்ன ? அதில் உள்ள முரண்பாடு* ;~



பூமியை அல்லாஹ் விரித்தான் என்று சொல்லும் போது அதற்கும் ஒரு கதை உள்ளது. இந்த கதையை நாம் தபரியில் பார்க்கலாம். அதில் உள்ள இரண்டு அறிவிப்புகளை கீழே போடுகிறேன்.

Tabari volume 1 page 218

According to Ibn al-Muthanna -Ibn Abi 'Adi - Shu'bah _

Sulayman (al-A'mash ?) -Abu Zabyan -Ibn 'Abbas:

அல்லாஹ்வால் உருவாக்கப்பட்ட முதல் பொருள் பேனா ஆகும். இனி என்ன நடக்க போகிறது என்பதை (விதியை)எழுத ஆரம்பித்தது. பின்னர் அல்லாஹ் நீராவியை உயர்த்தினார். பின்னர் அதிலிருந்து வானங்கள் உருவாக்கப்பட்டது. பின்னர் அவர் மீனை படைத்தார். பூமி இதன்(மீனின்) மீது பரப்பப்பட்டது. உடனே மீன் நகர்ந்தது. இதன் விளைவாக பூமி அதிர்ந்தது. இந்த அதிர்வு மலைகள் மூலம் நிலைநாட்டபட்டது. ஏனென்றால் மலைகள் பூமியின் மேல் உயரமாக உள்ளது.

(68;1 ஆம் வசனத்தில் இந்த நூன் என்ற வார்த்தை இடம்பெற்றுள்ளது)

பக்க 219 ;~

According to Ibn Bashshar -Yahya -Sufyan -Sulayman (al-a 'mash ?) -Abu Zabyan -Ibn 'Abbas: அல்லாஹ் முதன் முதலில் பென்னை படைத்தார். அல்லாஹ் அதனிடம் எழுதும் படி சொன்னார்.என்ன எழுத வேண்டும் என்று பென் கேட்டது. ஏற்கனவே நிர்ணயிக்க பட்டத்தை எழுதும் படி அல்லாஹ் சொன்னான்.முடிவு காலம் வரைக்கும் நடைபெற போகும் சம்பவங்களை பென் எழுதியது. பின்னர் அல்லாஹ் மீனை படைக்கிறார். பின்னர் நீராவியை எடுத்து அதிலிருந்து வானக்களை பிரித்தார். பூமியை மீனின் முதுகில் விரித்தார். மீன் நகர்ந்தது. இதனால் பூமி அதிர்ந்தது. இவ்வாறு அதிர்ந்த பூமி மலைகளை நாட்டின் படியால் நிலைநிறுத்த பட்டது.

தபரி (சொல்கிறார்) ;~இந்த  அறிவிப்புகள் இப்னு அப்பாஸ் மற்றும் மற்றவர்கள் மூலமாக வலுவான பரம்பரை வழியாக கடத்தப்பட்டது.

மேலே நீங்கள் படித்த புராண கதை தான் குரானில் பூமியை அல்லாஹ் விரித்தான் என்று சொல்வதின் அர்த்தமாக உள்ளது. இந்த புராண கதையை குறித்து நான் விமர்சிக்க ஒன்றுமே இல்லை நீங்களே நிதானித்து கொள்ளுங்கள். இது உண்மையான இறைவனிடம் இருந்து வந்தது தானா என்பதை. இந்த நூன் என்ற வார்த்தை குர்ஆனிலும் உள்ளது 68;1 ஆம் வசனம். இதனுடைய இப்னு அப்பாஸினுடைய தப்ஸீரிலும் இதே சம்பவத்தை பார்க்கல்லாம்.

இனி இந்த விரிப்பில் குரானில் உள்ள ஒரு முரண்பாட்டையும் பார்ப்போம்.

மேலும், அவன் எத்தகையவன் என்றால் அவனே பூமியை விரித்து. அதில் உறுதியான மலைகளையும், ஆறுகளையும் உண்டாக்கினான்; இன்னும் அதில் ஒவ்வொரு கனிவர்க்கத்திலிருந்தும் இரண்டு இரண்டாக ஜோடிகளை உண்டாக்கினான்; அவனே இரவைப் பகலால் மூடுகிறான் - நிச்சயமாக இவற்றில் சிந்திக்கும் மக்களுக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன.

(அல்குர்ஆன் : 13:3)

மேலே உள்ள வசனத்தில் பூமியை உண்டாக்கின பொது அதை விரித்தகாக அல்லாஹ் சொல்கிறான் ஆனால் கீழே உள்ள வசனத்தை பாருங்கள்......

இன்னும், பூமி விரிக்கப்பட்டு,

(அல்குர்ஆன் : 84:3)

அது, தன்னிலுள்ளவற்றை வெளியாக்கி, அது காலியாகி விடும் போது-

(அல்குர்ஆன் : 84:4)

இந்த வசனங்கள் மறுமை நாளில் நடைபெறும் சம்பவத்தை குறிக்கிறது......அப்போது தான் பூமி விரிக்கபடும் என்று சொல்கிறது...... இது தெளிவான முரண்பாடு

*தூண்கள் உள்ள வசனம்*

குரான் கூறும் பூமி தட்டையாக உள்ளது என்பதை குரான் மற்றும் இஸ்லாமிய கிரந்தங்களின் அடிப்படையில் பார்த்து விட்டோம். அதே போல குரான் கூறும் வானம் என்பது ஒரு திட பொருள் என்றும் பார்த்து விட்டோம். இதை உறுதிப்படுத்தும் வகையில் இன்னும் கூடுதலாக குரான் கூறும் வானம் எப்படிப்பட்டது என்று பார்ப்போம். மனிதர்களால் பார்க்க முடியாத தூண்களால் பூமியின் மீது விழாத படி தாங்கி நிற்க கூடியதாக தான் வானத்தை பற்றி குரான் சொல்கிறது.

(இவ்வேதத்தை அருளிய) அல்லாஹ் எத்தகையவனென்றால் அவன் வானங்களைத் தூணின்றியே உயர்த்தியுள்ளான்; நீங்கள் அவற்றைப் பார்க்கிறீர்கள்; .............

(அல்குர்ஆன் : 13:2)

இந்த வசனத்துக்கு விளக்கமாக இப்னு கதிர் அவர்களுடைய தப்ஸீரில் இப்னு அப்பாஸ் சொன்ன செய்தி ; "தூண்கள் உள்ளன. ஆனால் நீங்கள் அவைகளை பார்க்க முடியாது. "

இதன் மூலம் மனிதர்களால் பார்க்க முடியாத தூண்கள் உண்டு என்பதை குரான் சொல்கிறது என்பதை புரிந்து கொள்ளலாம்.

இன்னும் இதை உறுதி படுத்தும் அடுத்த வசனத்தை பாருங்கள்.

..,......,......; தன் அனுமதியின்றி பூமியின் மீது வானம் விழுந்துவிடாதவாறு அவன் தடுத்து கொண்டிருக்கிறான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது மிக்க இரக்கமும், அன்பும் உள்ளவன்.

(அல்குர்ஆன் : 22:65)

இந்த வசனங்களில் இருந்து நாம் என்ன புரிந்துகொள்ள முடிகிறது என்றால் "மனிதர்களால் பார்க்க முடியாத தூண்களால் வானம் பூமியின் மீது விழாத படி தடுத்து நிறுத்தி கொண்டு இருக்கிறான்" .

வானத்திலிருந்து ஒரு துண்டு விழுவதை அவர்கள் கண்டார்களானால், அதை அடர்த்தியான மேகம் என்று அவர்கள் கூறிவிடுவார்கள்.

(அல்குர்ஆன் : 52:44)

இங்கே அல்லாஹ் வானத்தில் இருந்து துண்டு கீழே விழும் என்று அல்லாஹ் சொல்கிறான். இதனால்  நாம் முழுமையாக புரிந்து கொள்ளும் செய்தி என்னவென்றால்  அல்லாஹ் கூறும் வானம் என்பது ஒரு திட பொருள் ஆகும். அதை மனிதர்களால் பார்க்க முடியாத தூண்கள் மூலம் அந்த வானம் பூமியின் மீது விழாமல் தடுத்து கொண்டு இருக்கிறான். ஆனாலும் முஹம்மது நபியின் காலத்தில் வானத்தில் இருந்து துண்டுகள் விழுந்ததாக 22;65 ஆம் வசனத்திலும் பார்க்கலாம்.

அருமையானவர்களே வானம் என்பது ஓர் வெற்றிடம் என்பதை தெரியாத ஒரு கடவுள் தான் அல்லாஹ் என்பது இவைகளின் மூலமாக மிக தெளிவாக நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

*குரானில் படைத்தல் பற்றி அறிவே இல்லாமல் பேசிய அல்லாஹ்*

பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.

(அல்குர்ஆன் : 41:11)

ஆகவே, இரண்டு நாட்களில் அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென அறிவித்தான்; இன்னும், உலகத்திற்கு சமீபமான வானத்தை நாம் விளக்குகளைக் கொண்டு அலங்கரித்தோம்; இன்னும் அதனைப் பாதுகாப்பாகவும் ஆக்கினோம்; இது யாவரையும் மிகைத்தவனும், ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனுடைய ஏற்பாடேயாகும்.

(அல்குர்ஆன் : 41:12)

இந்த வசனங்களை ஏற்கனவே பார்த்து விட்டோம். இருந்தாலும் இதில் காணப்படும் இன்னொரு தவறான விஷயத்தை பார்ப்போம். அதாவது பூமியை படைத்து விட்டு வானத்தின் பக்கம் அல்லாஹ் திரும்புகிறான். அது வெறும் ஒரு புகையாகவே இருந்தது. அப்போது அந்த புகையையும் பூமையையும் பார்த்து வரும் படி அல்லாஹ் கூப்பிடுகிறான். அப்போது அவ்விரண்டும் அல்லாஹ்விடம் செல்கிறது. அடுத்த விஷயத்தை தான் நன்றாக கவனியுங்கள். அந்த அவ்விரண்டையும் சேர்த்து அல்லாஹ் எழு வானங்களாக மாற்றினான். அப்படியானால் இப்போது இருக்கும் பூமி எது ? அந்த பூமி என்ன ஆனது என்று நீங்கள் இந்த வசனங்களை வைத்து கற்பனை பண்ணி பாருங்கள். இது மிகவும் தவறான வசனங்கள் ஆகும் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

*வானங்களில் உள்ளவற்றை மனிதனுக்கு கட்டுபட வைத்த அல்லாஹ்*

அவனே வானங்களிலுள்ளவை, பூமியிலுள்ளவை அனைத்தையும் தன் அருளால் உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்திருக்கிறான்; அதில் சிந்திக்கும் சமூகத்தாருக்கு நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் உள்ளன.

(அல்குர்ஆன் : 45:13)

(தவறாமல்), தம் வழிகளில் ஒழுங்காகச் செல்லுமாறு சூரியனையும் சந்திரனையும் அவனே உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான். மேலும், அவனே இரவையும் பகலையும் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான்.

(அல்குர்ஆன் : 14:33)

வானங்களில் உள்ளவை, சூரியன், சந்திரன் இவைகளை அல்லாஹ் மனிதனுக்கு வசப்படுத்தி கொடுத்தார் என்று பார்க்கிறோம்.ஆனால் சூரியனின் ஒளி பூமியின் மேல் இருப்பதும், அது இல்லாமல் இருப்பதும் (பகல் மற்றும் இரவு) நம்முடைய வாழ்க்கையில் அதிக மாற்றத்தை உண்டாக்குகிறது, அதாவது நாம் அதன் மேல் ஆதாரப்பட்டு (வசப்பட்டு) இருக்கிறோம். நம்முடைய தற்போதைய தொழில் நுட்பங்களின் உதவி கொண்டு உலகம் முழுவதும் வெளிச்சமாக்கவோ, அல்லது இரவாக்கவோ முடியாது. ஆக, இன்னும் சூரியனும், சந்திரனும் நம்முடைய கட்டுப்பாட்டில் (நமக்கு வசப்பட்டு) இல்லை. அவைகள் நாம் சொல்வது போல கேட்பதில்லை, நாம் தான் அவைகள் சொல்கிறபடி கேட்கிறோம், அல்லது அவைகளுக்கு ஏற்றாற் போல நம்முடைய வாழ்வை மாற்றிக்கொண்டு இருக்கிறோம்.மனிதனின் நன்மைக்காக இறைவன் சூரியனையும், சந்திரனையும் வானத்தில் வைத்தார் என்றுச் சொல்வதை ஏற்றுக்கொள்ளலாமே தவிர, அவைகள் மனிதனுக்கு கட்டுப்பட்டு இருக்கின்றன, செல்கின்றன என்றுச் சொல்வது உண்மை அல்ல. நாம் எந்த வகையிலும் அவைகளை கட்டுப்படுத்துவதில்லை, அவைகள் நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லை. இதனால், குர்ஆன் சொல்வது விஞ்ஞானத்திற்கு ஏற்காத ஒரு கருத்தாக உள்ளது

*பூமி சுற்றுகிறது என்று  தெரியாத அல்லாஹ்*

நாம் இதுவரை குரானில் அல்லாஹ் வானங்களையும் பூமியையும் அதில் உள்ளவற்றையும் படைத்ததில் உள்ள தவறுகளையும் முரண்பாடுகளையும் பார்த்தோம். மேலே நாம் குரான் அடிப்படையில் பூமி ஒரு தட்டை என்பதையும் கவனித்தோம். இப்போது பூமி என்பது சூரியனை சுற்றி கொண்டு வருகிறது என்று அல்லாஹ்வுக்கு தெரியாமல் போனதையும் குறித்து பார்க்கலாம்.

முதலாவது ஒரு குரான் வசனத்தை பாருங்கள்

(நபியே!) உம்முடைய இறைவன் நிழலை எப்படி நீட்டுகின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா? மேலும் அவன் நாடினால் அதனை (ஒரே நிலையில்) அசைவற்றிருக்கச் செய்ய முடியும். (நபியே!) பின்னர் சூரியனை - நாம் தாம் நிழலுக்கு ஆதாரமாக ஆக்கினோம்.

(அல்குர்ஆன் : 25:45)

நமுக்கு நிழல் உருவாக காரணம் வெளிச்சம் என்பது தெரிந்த விஷயம் தான். ஆனால் இங்கே அல்லாஹ் சொல்கிற விஷயம் என்னவென்றால் நிழலின் நீளம் கூடுவதற்க்கும் குறைவதற்க்கும் சூரியனை ஆதாரமாக வைத்தோம் என்று என்று சொல்கிறான். இது தான் பிழையான செய்தி. நிழலின் நீளம் கூடுவதற்க்கும் குறைவதற்க்கும் காரணம் பூமியின் சுழற்சியே ஆகும். ஆனால் இந்த செய்தி அல்லாஹ்வுக்கு தெரியாது. இதனால் தான் அல்லாஹ் அவ்வாறு தவறாக சொல்கிறான்.

இன்னும் சூரியன் ஒரு நிலையாக நிற்க கூடுயது என்றும் சூரியனை பூமி தான் சுற்றி வருகிறது என்றும் நமுக்கு தெரிந்ததே. ஆனால் இது அல்லாஹ்வுக்கு தெரியாது. இதை பற்றி முஹம்மது நபி சொல்கிறதை கீழே பார்ப்போம்

அபூ தர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சூரியன் மறைந்த நேரத்தில் என்னிடம், 'அது (சூரியன்) எங்கு செல்கிறது என்று உனக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். நான், 'அல்லாஹ்வும்,அவனது தூதருமே அறிவார்கள் என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், 'அது அர்ஷுக்கு (இறை சிம்மாசனத்திற்குக்) கீழே ஸஜ்தா (வணக்கம்) செய்வதற்காகச் செல்கிறது. அங்கு அது (கிழக்கிலிருந்து உதயமாகுவதற்கு இறைவனிடம்) அனுமதி கேட்கிறது. உடனே அதற்கு அனுமதியளிக்கப்படுகிறது. (இறுதியாக ஒரு நாள்) அது ஸஜ்தா செய்ய, அந்த ஸஜ்தா ஏற்கப்படாமல் போகவிருக்கிறது. அப்போது அது (வழக்கம் போன்று) கிழக்கிலிருந்து உதயமாகுவதற்கு அனுமதி கேட்கும்; அதற்கு அனுமதியளிக்கப்படாது. மாறாக, 'வந்த வழியே திரும்பி விடு' என்று அதற்கு உத்தரவிடப்படும். அதன்படி அது மேற்கிலிருந்து உதயமாகும்' என்றார்கள். இதைத் தான், 'சூரியன், தான் நிலை கொள்ளும் ஓர் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. அது பேரறிவாளனான வல்லமை மிக்க (இறை)வனின் நிர்ணயமாகும்' என்னும் (திருக்குர்ஆன் 36:38) இறைவசனம் குறிக்கிறது' என்றார்கள்.

ஸஹீஹ் புகாரி : 3199.

அத்தியாயம் : 59. படைப்பின் ஆரம்பம்

அதாவது ஒவ்வொரு நாளும் சூரியன் அல்லாஹ்வின் சிங்காசனத்தில் சென்று சஜ்தா செய்து கொண்டு அடுத்த நாள் உதயமாக அனுமதி கேட்டு கொண்டு வருமாம். ஆனால் குறிப்பிட்ட ஒரு நாள் அதற்க்கு அனுமதி அளிக்கப்படாமல் போகுமாம். இதில் அல்லாஹ்வின் அறிவை நீங்களே நிதானித்து கொள்ளுங்கள்.

பருவ நிலை மாற காரணம் என்ன ?

அதாவது கோடை காலத்தில் உண்டாகும் வெப்பத்துக்கும் குளிர்காலத்தில் உருவாகும் குளிருக்கும் நரகம் விடும் மூச்சு தான் காரணமாம்.

.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'இறைவா! என்னுடைய ஒரு பகுதி, மறுபகுதியைச் சாப்பிட்டுவிட்டது என்று நரகம் இறைவனிடம் முறையிட்டது. கோடையில் ஒரு மூச்சு விடுவதற்கும் குளிரில் ஒரு மூச்சு விடுவதற்கும் இறைவன் அதற்கு அனுமதி வழங்கினான். கோடை காலத்தில் நீங்கள் காணும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் நீங்கள் உணரும் கடும் குளிரும் அதன் வெளிப்பாடுகள் தாம்.'

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 537.

அத்தியாயம் : 9. தொழுகை நேரங்கள்

மூச்சுவிடுவதற்கு அனுமதி கிடைக்கவில்லையெனில் நரகம் மூச்சு திணறி இறந்துவிடும் என்பதை அறிந்த அல்லாஹ் அதற்கு அவ்வாறான ஒரு சிறப்புச் சலுகையை வழங்கியிருக்கிறான். இதிலிருந்து அல்லாஹ்வின் அளவற்ற கருணையையும் நாம் அறிந்து கொள்ளலாம்.

பூமியின் சுழற்சியினால் ஒவ்வொரு நாட்டிலும் நேரங்களும்பூமியில் ஒவ்வொரு நாட்டிலும் பருவநிலை காலங்களும் மாறுபடும். ஆனால் இது ஒன்றுமே தெரியாத முஹம்மது நபி என்று தான் நம்மால் புரிந்துகொள்ள முடியும்.

பூமி சுற்றுகிறது என்று தெரியாத அல்லாஹ் என்பதற்கு இன்னொரு சான்றையும் பாருங்கள்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

'நம்முடைய இறைவன் ஒவ்வொரு இரவும் கீழ் வானத்திற்கு இறங்கி இரவில் மூன்றில் ஒரு பகுதி இருக்கும்போது, 'என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அதை நான் அங்கீகரிக்கிறேன். யாரேனும் என்னிடம் கேட்டால் அவருக்கு கொடுக்கிறேன். யாரேனும் என்னிடம் பாவமன்னிப்புக் கோரினால் அவரை நான் மன்னிக்கிறேன்' என்று கூறுவான்'.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 1145.

அத்தியாயம் : 19. தஹஜ்ஜுத்

நீங்களே சிந்தித்து பாருங்கள் பூமியில் ஏதாவது ஒரு இடத்தில் இரவு என்பது இருந்துகொண்டே தான் இருக்கும். இந்த ஹதீஸின் படி அல்லாஹ் ஒரு முறை கீழ்வானத்துக்கு இறங்கினால் திருப்பி மேலே போக முடியாத பரிதாபமான சூழ்நிலை தான் அல்லாஹ்வுக்கு ஏற்படும்.

முடிவுரை ;~

வானம் மற்றும் பூமி படைகபட்டதை குறித்து குரானில் உள்ள தவறுகளையும் முரண்பாடுகளையும் நாம் தெளிவாக நிதானித்தோம். அல்லாஹ் குரானில் குரானை பற்றி சிந்திக்க வேண்டும் என்றும், இது உண்மையான இறைவேதம் இல்லை என்றால் இதில் முரண்பாடுகள் இருக்கும் என்று 4;82 ல் சொல்கிறான். குரானில் இந்த வசனத்தின் படி பார்த்தால் குரானில் படைத்தல் விஷயத்திலேயே நிறைய முரண்பாடுகளை பார்த்து விட்டோம். உண்மையில் இது படைத்த இறைவனிடம் இருந்து வந்திருந்தால் இப்படி பட்ட தவறுகள் வந்திருக்காது. ஆக குரான் இறைவேதம் இல்லை என்பது நிரூபணம் ஆகிறது. ஆகையால் உங்கள் மறுமைக்காக நீங்கள் தேர்வு செய்து இருக்கும் மார்க்கம் உண்மையான மார்க்கமா என்பதை நிதானித்து இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு பரலோகம் செல்ல உங்களை அன்புடன் அழைக்கிறோம். தேவன் தாமே உங்களை ஆசீர்வதிப்பாராக. ஆமென்

